THE HON. SRI C. SUBRAMANIAM : ஜூலை மாதத்தில்தான் போகவில்லை என்று மந்திரி அவர்கள் சொல்லுகிருர்கள். அதைத் தான் நான் சொன்னேன்.

*Channel from Sathanur Dam*

* 459 *Q.*—SRI K. VINAYAGAM : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) how much of water is allowed in the channel leading to Thirukoilur from Sathanur Dam for irrigation purposes;

(*b*) whether betterment tax is collected from the ryots of lands abutting the Thirukoilur channel; and if so, at what rate; and

(*c*) whether the channel is wide and deep enough to take more water?

THE HON. SRI P. KAKKAN : (*a*) There is no channel leading to Thirukoilur (South Arcot district) from Sathanur Dam.

(*b*) & (*c*) Does not arise.

SRI K. VINAYAKAM : சாத்தனூர் டாமிலிருந்து திருக்கோயிலூருக்கும், அதன் பக்கத்திலுள்ள நிலங்களுக்கும் தண்ணீர் கொடுப்பதற்கு அரசாங்கத்திடம் திட்டமேயில்லையா ?

THE HON. SRI P. KAKKAN : தண்ணீர் உண்டு. அதற்கு ஒரு கால்வாய் வெட்டவில்லை என்றுதான் சொன்னேன். சாத்தனூருக்கு 4½ மைலுக்கு அப்பால் ஒரு அணை கட்டப்படப்போகிறது. அதிலிருந்து தண்ணீர் கொடுக்கப்படும்.

SRI M. KANDASAMI PADAYACHI : சாத்தனூர் அணைக்கட்டுத் திட்டத்திஞல் பழைய ஆயக்கட்டு நிலங்களுக்குப் பாதகம் எதும் ஏற்படாமல் இருக்க ஒரு திட்டத்தை வகுப்பார்களா ?

THE HON. SRI P. KAKKAN : எற்கெனவே இருந்த பழைய ஆயக்கட்டு நிலங்களுக்கு பாதகமில்லாமல் திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது.

SRI K. R. NALLASIVAM : திருக்கோயிலூரிலுள்ள பாசன நிலங்களுக்கு அபிவிருத்தி வரி வசூலிக்கப்படாவிட்டாலும், அபிவிருத்தி வரியை நிர்ணயிக்க அதிகாரிகள் போடப்பட்டிருந்தார்களே, அவர்கள் குறைந்த பட்ச வரியாகவும், அதிக பட்ச வரியாகவும் எவ்வளவு விதிக்க முடியும் என்று தெரிவித்திருக்கிருர்கள் ?

THE HON. SRI P. KAKKAN : அபிவிருத்தி வரி உண்டு. ஆனல் எவ்வளவு என்பதற்கு தனிக் கேள்வி போடவேண்டும்.

SRI A. GOVINDASAMY : சாத்தனூர் திட்டம் அமுலுக்கு வந்ததிஞல் திருக்கோயிலூர் வட்டம், மணலூர்பேட்டை குறுவட்டத்திலே 4,000 ஏக்கர் பாசன வசதி அடையும் என்று தெரிவிக்கப்பட்டது. இப்போது மணலூர்பேட்டையில் எவ்வளவு ஏக்கர் பாசனத்திற்கு வந்திருக்கிறது ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் குறைத்துச் சொல்லுகிருர். நாலாயிரத்து இருநூறு ஏக்கர் பாசனத்திற்கு வரும்.

"The project was thrown open for irrigation on 10th November 1957 and so far 3,200 acres have received supply."